REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

திட்டம்

குறைகள் இல்லாத முறையில் திட்டங்களைத்தீட்டி, மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும்.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

சலுகை

பிரத்தியேக அந்தஸ்தையும் சலுகையையும் நான் வெறுக்கிறேன்.

-அண்ணல் காந்தி

மலர்: 3 (●) சென்னை 19—4—1979 வியாழன் (★)❋●❋(★) வெளியீடு 20—4—1979 வெள்ளி (●) இதழ்: 181

## ★ கருணாநிதி ஆட்சி காலத்தில் கூட்டத்திற்கு ஆள் சேர்க்க நடந்த முறைகேடு

### ★ ஆதாரம் தரமுடியாமல் லத்தீப் ஓட்டம்

★ காவல்துறை 3 பிரிவாக பிரிக்கப்படும்
★ மதுவிலக்கை அமலாக்கத் தனிப்பிரிவு
★ 20இடங்களில்புதியதீயணைப்புநிலையம்
★ 2 ரூபாயாக இருந்த போலீசார் உணவு அலவன்சு ரூபாய் 4-50 ஆக உயர்வு

★ விடுமுறையில் பணிசெய்யும்போலீசார் சம்பளம் ரூ. 2 லிருந்து ரூ.7 ஆகஉயர்வு
★ விபத்தில் ஊனமுற்ற போலீசாருக்கு ரூபாய் 5 ஆயிரம் வரை உதவி

### ★ வீர மரணம் அடையும் காவலருக்கு ரூபாய் 20 ஆயிரம்

# காவல் துறையினருக்கு புதிய சலுகைகள்

சென்னை, ஏப். 19- சட்டம், ஒழுங்கைக் காப்பாற்றி பொதுமக்களின் உயிருக்கும் உடமைக்கும் பாதுகாவலர்களாக விளங்கும் போலீஸ் துறையில் உள்ளவர்களுக்கு ஏராளமான சலுகைகளை முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தார். காவல்துறை வரலாற்றிலேயே இத்தகைய அளப்பரிய சலுகைகளை அளித்த முதலமைச்சர் புரட்சித் தலைவர் மட்டுமே ஆவர்.

காவல்துறை மானியம் தீயணைப்பு மானியம் மீது சட்டசபையில் நடந்த விவாதத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று இரவு பதில் அளித்தார்.

விவாதத்திற்குப் பதில் அளித்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

காவல் துறை தீயணைப்புத்துறை மானியங்கள் மீது கலந்து கொண்டு பல்வேறு உறுப்பினர்கள் நல்ல நல்ல கருத்துக்களைக் கூறி இருக்கிறார்கள்.

நல்ல நல்ல கருத்துக்கள் என்றால் சிலஉறுப்பினர்கள் தாக்கிப் பேசியதும் நல்ல கருத்துக்கள் தானா என்ற கேள்வி எழலாம்.

நல்ல நல்ல கருத்து என்பது நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை அவரவரவர் கோணத்தில்உணர்வதைச் சொல்லி இருக்கிறார்கள்.

விவாத துவக்கத்தில் இருந்து சொல்லப்பட்ட கருத்துக்களைக் கவனித்து வருகிறேன் கரியமாணிக்கம் அம்பலம் தன் உள்ளத்தில் பட்டதை வெளியே சொன்னார்

அரசு எப்படியோ அப்படித்தான் காவல் துறை செயல்படும். ஆகவே அரசு தன் செயல் முறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற வகையில் பேசினார்.

இதை நல்ல கருத்து என்று எடுத்துக்கொள்ளும் போது முதல்வரான நான் நடந்து கொள்ளும் விதம் சரியல்ல என்று சொல்லியதாக கருதுகிறேன்.

காவல் துறையினருக்கு அதிக அதிகாரம் இருக்கிறது என்றும் காவல் துறையினர் செயல்பட முடியாமல் தடுக்கப்படுகிறார்கள் என்றும் இரண்டு வித குற்றச்சாட்டுக்களை உறுப்பினர்கள் தெரிவித்தவர்.

ஜனதாக்கட்சி தலைவர் ஜேப்ஸ் கூட இந்தப் போக்கில பேசினார்.

ஏதோ ஒரு வழக்கில் நீதிமன்றம் போக வேண்டாம் சமாதானமாகப் போங்கள் என்று ஒரு அதிகாரி சொன்னதாகவும் அப்படி நடக்கலாமா என்றும் கேட்டார்கள்

வழக்கு என்று நடந்தால் ஒருவருக்கு தோல்வி, ஒருவருக்கு தண்டனை கிடைக்கும், இதனாலும் ஆத்திர உணர்வுகள் ஏற்படக்கூடும்

### அமைதி விரும்பும் அரசு

நாட்டில் அமைதி காப்பது வெறும் சட்டத்தால் மட்டும் அல்ல. யாரையும் தண்டித்தால் - சிறைக்கு அனுப்பினால்மட்டும்அந்தப் பிரச்சினை தீர்ந்துவிடாது.

வெற்றி தோல்விகளை விட மக்கள் உள்ளத்தில் அமைதி சூழ்நிலை ஏற்பட வேண்டும் என்று இந்த அரசு விரும்புகிறது.

துப்பாக்கியை நம்பாதீர்கள் தடியடியைத் தவிருங்கள் என்றார்கள்

பேச்சின் மூலம்விவாதத்

2 ம்பக்கம் பார்க்க

இந்திராவை கொலை செய்ய தி. மு. கவினர் முயற்சி

### வழக்கு விசாரணை தள்ளி வைப்பு

சென்னை, ஏப். 19. இந்திரா காந்தியைக் கொலை செய்ய முயன்ற வழக்கு இன்று விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது

செசன்ஸ் நீதிபதி பக்கிரி சங்கர் முன்னிலையில் இந்த வழக்குஇன்றுவிசாரணைக்கு வந்தது,

குற்றஞ் சாட்டப்பட்ட 135 பேர்களில் 96 பேர் கோர்ட்டுக்குவந்திருந்தனர் கருணாநிதி, அன்பழகன் உள்பட மற்றவர்கள் வரவில்லை. இவர்கள் சார்பில் வழக்கறிஞர்கள் ஆஜரானார்கள்

வழக்கு விசாரணை 29-ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

★ எட்மண்ட்-ராகவானந்தம்மீது

### உரிமை பிரச்சினை தள்ளுபடி

சென்னை, ஏப். 19- அமைச்சர்கள் எட்மண்ட் ராகவானந்தம் ஆகியோர் மீது கொண்டுவரப்பட்டிருந்த உரிமை மீறல் பிரச்சினைகளை சபாநாயகர் முனு ஆதி இன்று தள்ளுபடி செய்தார்.

தொழிலாளர்நலஅமைச்சர் ராகவானந்தம் தொழிலாளர்கள்பற்றிதெரிவித்த சில தகவல் தவறானது என்று உமாநாத், ஒரு உரிமை மீறல் பிரச்சினை கொண்டு வந்து இருந்தார்

உணவுத்துறை அமைச்சர் எட்மண்ட் மீது, ரகுமான்கான் உரிமை மீறல் பிரச்சினை கொண்டு வந்திருந்தார்.

இவற்றிலும்உரிமைமீறல் எதுவும் இல்லை என்று சபாநாயகர் தள்ளுபடி செய்தார்.

### பாரதிராஜாவுக்கு பகிரங்க கடிதம்

4-ம் பக்கம்

## ஜனதா ராஜினாமா படலம் தொடர் கதை ஆகிறது

புதுடெல்லி,ஏப்.19-வடமாநிலங்களில் ஜனதா கட்சி அமைச்சர்கள் பலர் தங்கள் பதவிகளிலிருந்து விலகிய வண்ணம் இருக்கிறார்கள்.

பீகாரில் கர்ப்பூரி தாகூரை எதிர்த்து காபினெட் அமைச்சர்கள், துணை அமைச்சர்கள் உட்பட இதுவரை 20 பேர் ராஜினாமா செய்துள்ளனர்

வியாழன் காலை கூட சட்டமன்ற ஜனதா கட்சி கூட்டம் நடக்கும் முன்னால் ஒரு காபினெட் அமைச்சரான மோகன் ராம் விலகியுள்ளார்.

### அரியானா

அரியானாவில ஜனதா முதல்வராக இருக்கும் தேவிலால், சரண்சிங், கோஷ்டியை சேர்ந்தவர் அவரை எதிர்த்து, மங்கள் சேன் என்கிற ஜனசங்க அமைச்சர் விலகிவிட்டார் மேலும் மூன்று அமைச்சர்கள் விரைவில் விலகுவார்கள் என்று தெரிகிறது

### இமாசல பிரதேசம்

இமாசலப் பிரதேச மாநில ஜனதா முதலவராக இருக்கும் சாந்தா குமார் ஜனசங்கத்தைச் சேர்ந்தவர் இவரை எதிர்த்து மூன்றுஅமைச்சர்கள் விலகிவிட்டனர்.

### எம். பி. விலகல்

இமாசலப் பிரதேசத்தில் முதல்வர்பதவிக்குபோட்டியிடுவதற்காக துர்க்காசந்த் என்பவா தமது எம் பி பதவியை விட்டு விலகியுள்ளார்

### சபாநாயகர் விலகல்

இமாசல பிரதேச முதல்வரை ஆதரிப்பதற்காக சட்டமன்ற சபாநாயகர் சரவண்குமார் தமது பதவியை விட்டு விலகியுள்ளார்

### மத்திய அமைச்சர்விலகல்

ஜாம்ஷெட்பூர் கலவரங்கள் தொடர்பாக மத்திய உள்துறை அமைச்சர் எச் எம் படேல் மீது மத்திய துணை அமைச்சரான பஸ்லூர ரகுமான் குற்றம் சாட்டினர். பஸ்லூர் ரகுமானை அழைத்து இதுபற்றி பிரதமர் தேசாய் விளக்கம் கேட்டார் பஸ்லூர் ரகுமான் தமது ராஜிநாமா கடிதத்தை பிரதமரிடம் கொடுத்து விட்டார் என்று தெரிகிறது.

### பட்நாயக்

தன்மீதுள்ள ஊழல் குற்றச்சாட்டுக்களைப் பற்றி விசாரணை நடத்துவதை எதிர்த்து மத்திய இரும்பு உருக்குத்துறை அமைச்சர் பட்நாயக் தமது விலகல் கடிதத்தை பிரதமர் தேசாயிடம் கொடுத்துள்ளார்

இவ்வாறுராஜிநாமாபடலம் ஜனதா கட்சியில் ஒரு தொடர்கதையாகியுள்ளது

கிராமப்புற மக்களுக்கு ஒரு லட்சம் வீடுகள்

## தொழிலாளர் நலனை பாதுகாக்கஅரசின் சிறப்பு நடவடிக்கை

### அமைச்சர் ராகவானந்தம் தகவல்

சென்னை, ஏப். 19- செயலற்றுப் போன நிறுவனங்களை அரசே மேற்கொண்டு மீண்டும் திறந்துள்ளது தொழிலாளர் நலனை பாதுகாக்க அரசு சிறப்பு நடவடிக்கை எடுத்துள்ளது என்று அமைச்சர் ராகவானந்தம் தெரிவித்தார்.

சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட தொழிலாளர் மற்றும் வேலை வாய்ப்புத்துறை மானியக் கோரிக்கையில் தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் கூறி இருப்பதாவது:-

தமிழ் நாட்டில் 1978 ஆண்டில் தொழில் அதிபர்களுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே நல்லுறவு நிலவியது தொழிலாளர்களின் நலனுக்கென உள்ள சட்டங்கள் அனைத்தின் விதிமுறைகளை கண்டிப்பாகச் செயல்படுத்தி தொழிலாளர்களின் நலனைப் பாதுகாப்பது அரசின் தலையாய கொள்கையாகும்.

தொழிலாளர்களுக்கு வேலை நிறுத்தம் செய்ய உள்ள உரிமையை அரசு ஏற்றுக்கொள்ளும். அதே சமயம் வேலை நிறுத்தத்தில் சுமுகமான தீர்வுகாண உரிய காலத்தில் அரசு நடவடிக்கை மேற்கொண்டது.

தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கவும் அவர்களது நலனை மேம்படுத்தவும் வேண்டி அவர்களுக்கு குறைந்த அளவு ஊதிய விகிதங்களை அளிக்கவும், தொழிலாளர் நலச் சட்டங்களை செயல்படுத்தவும் அரசு சிறப்பு நடவடிக்கையை மேற்

(4-ம் பக்கம் பார்க்க).

### 'மன்றம்' இதழ் மீது உரிமை பிரச்சினை

சென்னை, ஏப். 19-மன்றம் வார இதழில் பிரசுரிக்கப்பட்டிருந்த கட்டுரை ஒன்றுக்கு ஆட்சேபம் தெரிவித்து மார்க்சிஸ்டு உறுப்பினர் உரிமை மீறல் பிரச்சினை ஒன்றை சட்டமன்றத்தில் கொண்டுவந்தார்,

இதுபற்றி பத்திரிகைக்கு எழுதி விளக்கம் கேட்டு பிறகு தீர்ப்பு அளிக்கிறேன் என்று சபாநாயகர் முனு ஆதி தெரிவித்தார்.

### * தியாகிகளின் குழந்தைகட்கு உதவித்தொகை பற்றிய அறிவிப்பு

சென்னை, ஏப். 19- தியாகிகளின் குழந்தைகளுக்கு கல்விநிலையங்களில் முழுக்கட்டண சலுகைகளும் உதவித் தொகைகளும் தமிழ்நாடு அரசாங்கத்தால் 1969 ஆம் ஆண்டிலிருந்து வழங்கப்பட்டு வருகின்றன. மூன்றுமாதங்கள் வரை சிறைவாசம் இருந்தவர்களின் குழந்தைகளுக்கும் இந்த சலுகை வழங்கப்படுகிறது மாநில அளவில் திறமையின் அடிப்படையில் வழங்கப்படும் உதவித் தொகைகள் பெற்றிட இதுவரை 3 ஆயிரம் வரை ஆண்டு வருமானம் உள்ளவர்களுக்கே என்று இருந்தது தற்போது ரூ 6 ஆயிரம் வரை வருமானம் உள்ளவர்களுக்கும் அனுமதிக்கப்பட்டு வருமானம் உயர்வு செய்யப்பட்டுள்ளது

தியாகிகளின் குழந்தைகள் முழுக்கட்டணச் சலுகைகள் உதவித் தொகைகள் பெற்றிட ஆண்டுவருமானம் ரூ. 3600 வரை உள்ளவர்களுக் கென்றிருந்தது, தற்போது ஆண்டு வருமானம் 6 ஆயிரம் ரூபாய் வரை உள்ளவர்களுக்கும் 1979-80-ம் ஆண்டிலிருந்து வழங்கப்படும்.

### 'சபாஷ் கலைஞர்' ப.உ.ச. கட்டுரை

2-ம் பக்கம்

# காவல்துறையினருக்கு புதிய சலுகைகள் (1ம் பக்கத் தொடர்ச்சி)

தின் மூலம் சமூக உறவு ஏற்படும் சச்சரவு தீரும் நிரந்தரமாக இருக்கும் அந்த வகையில் இந்த அரசு கூடுமானவரையில் வழக்குகளைப் போட்டு தொல்லை தரவிரும்பவில்லை இதனை மீண்டும் ஒருமுறை சொல்கிறேன்.

## பிரதமருக்கு இழுக்கு தேட ஜேம்ஸ் முயற்சியா?

ஜேம்ஸ் இங்கேஒரு பிரச்சினையை எழுப்பினர், சிந்தித்துத்தான் அதை எழுப்பினரா?

பிரதமரும் நானும் பேசிய கூட்டத்தில் நான் பேசிய பிறகு அங்கே மக்கள் எழுந்து செல்ல ஆரம்பித்தனர். அவர்களை காவல்துறையினர் தடுத்து நிறுத்தவில்லை இதனால் சலசலப்பு ஏற்பட்டது என்றார்.

இந்த செய்தி மக்களுக்கு தெரிய வேண்டுமா? முதல்வர் பேசிய பிறகு மக்கள் எழுந்தார்கள். பிரதமரை மதிக்கவில்லை என்று கூறிய ஜேம்சின் நோக்கம் புரியவில்லை.

## கருணாநிதி நடத்திய முறைகேடு

காவல்துறையினரைக் கேட்டு மக்களை உட்கார வைத்த காலம் 1972ல் இருந்து 76 வரை இருந்தது அந்த விதமுறை அதற்கு முன்னும் இல்லை அதற்குப் பின்னும் இல்லை.

அப்போதுதான் காவல் துறையினர் மட்டியில் உட்கார வைக்கப்பட்டுகூட்டத்தைப் பெரிதாகக் காட்டினார்கள். இருப்பவர்களும் வெளியே செல்ல முடியாதபடி வளைத்து உட்காருவார்கள் இவைகளைப் பார்த்து இருக்கிறோம்.

அந்த வகையில் பிரதமரும் இருக்கவேண்டும் என்று ஜனதா தலைவர் சொல்வது கண்டு வேதனை அடைகிறேன்.

அங்கு நாடாளுமன்ற உறுப்பினர் குமரிஅனந்தன் இருந்தார். ஆளுநர் இருந்தார்.

முதலில் வள்ளுவர் சிலை கால்கோள் விழா நடந்தது அப்போது சிலர் எழமுற்பட்டனர் பிறகு ரயில் நிகழ்ச்சி மாபெரும் நிகழ்ச்சி நடந்தது அப்போது நான் அங்கே கூறியதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்

நாட்டு வணக்கப்பாடல் முடியும் வரை யாரும் எழுந்திருக்கக் கூடாது. விருந்தினரை மதிக்கும் குமரி மக்கள் அந்தப்பண்புக்கு எடுத்துக்காட்டாக இருந்து ஒத்துழைக்க வேண்டும் என்னை ஏமாற்றி விடாமல் அனைவரும் உட்கார்ந்து இருக்க வேண்டும்'' என்று கூறினேன்

## ரயில்வே மந்திரி பாராட்டு

நான் கூறியதை மொழி பெயர்த்து தெரிந்து கொண்ட மத்திய ரயில்வே அமைச்சர் இதற்கு பாராட்டு தெரிவித்தார் ஆளுநரும் பாராட்டினார்

ஆனால் ஜேம்சுக்குயாரோ வேண்டும் என்று தவறான தகவல் தந்து இருக்கிறார்கள்

பிரதமரை அவமானப்படுத்தக் கருதி யாரோ இவரை பழிவாங்கியிருப்பதாக கருதுகிறேன். பாவம்

இந்தியப் பிரதமரை சாதாரண பேச்சாளர் அவமானப்படுத்தினர் என்று சொல்வது வேதனைக்குரியது.

## பிரதமர் மகிழ்ச்சி

தமிழகத்தில் இருந்து திரும்பும் போது பிரதமர் எவ்வளவு மகிழ்ச்சியோடு திரும்பினர் தெரியுமா?

லாரிகளில் ஆட்களை ஏற்றிவருவதில் ஜனதாவுக்கும் காங்கிரசுக்கும் ஆளும்கட்சிக்கும் அரசு சாதகமாக இருந்தது என்று குற்றச்சாட்டு சொல்லப்பட்டது

அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தினர் லாரிகளை பயன்படுத்தியதற்காக ரூ 25 அபராதம் விதிக்கப் பட்டது சில இடங்களில் ரூ 50 அபராதம் விதிக்கப் பட்டது

ஆகவே நடவடிக்கை எடுக்காமலில்லை இதே போல தேசிய காங்கிரஸ் செய்திருந்தால் நடவடிக்கை எடுக்க தயாராக இருக்கிறோம்.

ஜனதாக்கட்சி விட்டிருந்தால் அது முதல் முறையாக செய்திருந்து விட்டிருக்கலாம்.

இந்த அரசைப் பொறுத்தவரையில் வேறுபாடு பார்த்து செயல்படத் தயாராக இல்லை

காவல்துறையினர் லாரிகளைப் பயன்படுத்தலாமா என்று கூட கேட்டார்கள் ஆனால் அவர்களைப் பக்குவத்துடன் பயன்படுத்துகிறார்கள்

இத்தனை ஆள் என்று கணக்கிட்டு ஏற்றுகிறார்கள் ஆனால் அரசியல் கட்சிகள் லாரிகளில் ஆட்களை ஏற்றி விடுவதில் பலபிரச்சினைகள் ஏற்படுகின்றன.

மாநாடு நடத்த வர ஆரம்பித்தனர் பிறகுபோக போக குழப்பம் விளைவிக்க லாரிகளில் ஏற்றிவரத்தலைப்பட்டனர்.

இப்படிப்பட்ட நிலைமைகளை தடுக்கவே லாரிகளில் ஆட்களை ஏற்றிவரக் கூடாது என்று தடுத்தோம்

இதில் வரையறையைப் பின்பற்றி நடக்க உத்தரவாதம் தந்தால் இதுபற்றி அரசு பரிசீலிக்கத் தயார்.

ஆனால் நிலைமைகளைப் பார்க்கவேண்டும், எத்தனை பேர் இறந்து இருக்கிறார்கள், எத்தனை பேர் கால் முறிந்து இருக்கிறது? எத்தனை பேர் குழப்பம் விளைவிக்க வந்திருக்கிறார்கள் என்று பார்க்கவேண்டும்.

லாரிகளில்வர பாதுகாப்புவசதிகளுக்கு உத்தரவாதம் தந்தால் அரசு பரிசீலிக்கும்

இங்கே குற்றஞ்சாட்டிப் பேசியவர்கள் ஒரு குற்றத்தைக்கூறி இருக்கிறார்கள்

போலீஸ் அதிகாரிகள் ''அட்டூழியம்'' என்று சொல்லா விட்டாலும் அந்த வார்த்தைக்கும் சேர்த்தே விளக்கம் தருகிறேன்.

## வாழ்க்கை உத்தரவாதம்

அதிகாரிகள் கொடுமை என்றார்கள் பொய் வழக்கு போடுகிறார்கள் சார்ஜ்ஷீட் தாமதம் என்று எல்லாம் சொன்னார்கள்.

காவல்துறை பற்றி எவ்வளவோ மோசம் என்றாலும் அவர்கள் வருமானம் பெருக வேண்டும் என்று அனைவரும் சொன்னார்கள்.

காவல் துறையினருக்கு உத்தரவாத வாழ்க்கை அமைத்து தர வேண்டும் என்று அனைவரும் கருத்து தெரிவித்தனர்.

தவறுகள் இருக்கின்றன யாரும் மறுக்க வில்லை வழக்குகளில் கண்டுபிடிக்கப்பட்டு தண்டனை பெற்ற வழக்கு- பதிவு செய்யப்பட்ட வழக்கு என்று பிரித்து பார்க்க வேண்டும்

## குற்றம் குறைந்த ஆண்டு

அவசர கால சட்டம் இருந்தபோது என்ன நன்மை தீமை ஏற்பட்டு இருக்கிறது என்று நான் குறிப்பிட்டு இருக்கிறேன். 76ம் ஆண்டில் கொலை கொள்ளை கலவரம் மிகமிக குறைவாக இருந்து இருக்கிறது.

அந்த ஆண்டில் ஏன் குறைந்தது என்று யாரும் 76-ஐ தொடமாட்டேன் என்கிறார்கள்.

உமாநாத் (குறுக்கிட்டு): அந்த ஆண்டிலும் குற்றம் அதிகரித்து இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவர்: எந்தப் பிரிவில் குற்றம் அதிகரித்தது என்று பார்க்க வேண்டும். இப்படி நான் சொல்வதால் அதற்கு ஆதரவு தேடுவதாக கருத வேண்டாம்.

இதனாலேயே இந்த அரசு மினிமிசா கொண்டுவர ஆசையும் இல்லை, அப்படிப்பட்ட நிலையை நல்லவர்கள் ஒத்துக் கொள்ளமாட்டார்கள்.

நாங்கள் கூட ஒரு அவசரச்சட்டம் கொண்டு வந்தோம். அந்த சட்டம் இருந்தபோதே தலைவர்களுடன் கலந்து பேசி முடிவுகளை எடுத்தோம். பிறகு அந்த சட்டம் காலாவதி ஆக வைத்தோம்.

இப்படிப்பட்ட இந்த அரசை தொழிலாளர் விரோத அரசு என்கிறார்கள். போலீசை வைத்து தொழிலாளர்களை மிரட்டுவதாகச் சொல்கிறார்கள். நல்லவேளை மாணவர்களைப் பற்றி பேசவில்லை.

அடிப்பது, சுடுவது, சிறைக்கு அனுப்புவது என்பதில் எனக்கு நிச்சயம் மகிழ்ச்சி இல்லை.

## ஆபத்து என்று தெரிந்தும்

அப்படி இருந்தும் சட்டம் மறுநாளே எப்படிப்பட்ட ஆபத்துஎன்று தெரிந்தும் அந்த இடத்திற்கு நான் போகாமல் இருக்கவில்லை.

மற்றவர்கட்கு வந்த விபத்து எனக்கு வந்தாலும் பரவாயில்லை என்று போனேன் மக்களை சந்தித்தேன்.

மக்களிடம் நம்பிக்கை இருந்ததால் அந்த துணிவு வந்தது மக்கள்குறைகளைத் தீர்க்க விளக்கம் கேட்கவே சென்றேன்.

இதற்கு அல்லாமல் அச்சுறுத்தி- பயமுறுத்தி ஆட்சியை இன்னும் கொஞ்ச காலம் கையில் வைத்திருக்கலாம் என்பதற்காக மக்களை சந்திக்கவில்லை.

அந்த இடத்தில் தண்ணீர் எடுத்தால் தண்ணீர் குறையாது என்று அதிகாரிகள் தெரிவித்தனர். ஆனால் மக்கள் மனதில் சந்தேகம் ஏற்பட்டதால் அதனை நிறுத்தி வைக்கச் சொன்னேன்.

நீதிபதி தீர்ப்புக்குப் பிறகு நானே நேரில் சென்று 3-4 மணி நேரம் பார்த்து தண்ணீர் குறைகிறதா என்று பார்த்து முடிவு செய்வேன் என்று சொல்லி இருக்கிறேன்.

இதனை அவர்கள் ஒத்துக் கொண்ட பிறகுதான் திரும்பி வந்தேன்.

எங்கெங்கு குடிநீர் இல்லையோ அதனைத் தர முயற்சி மேற்கொண்டு இருக்கிறோம்.

ஓட்டுப் போட்டவர்களை துன்பப்படுத்தவோ- ஓட்டுப்போடாதவர்களை அலட்சியப்படுத்தவோ இல்லை.

இப்படிப்பட்ட பிரச்சினைகளை உறுப்பினர்கள் கேட்டதால் பதில்தர வேண்டியிருக்கிறது.

போலீஸ், இன்ஸ்பெக்டர் ஆகியோர்மீது குற்றம் சொன்னார்கள். இவர்கள் எல்லாம்புதிதாக வந்தவர்கள் அல்ல முன்பு இருந்தவர்கள் தான்.

எங்களை எல்லாம் பாடுபடுத்தியவர்கள் தான். கிளைவ் ஆஸ்டல், நெய்வேலியில் தொழிலாளர்களை வீடு புகுந்து அடித்தது, பாலசுந்தரத்தை துரத்தித் துரத்திக் கொலை செய்தது ஆகிய சம்பவங்கள் நடந்த அப்போதும் இவர்கள் இருந்தார்கள்

## மனமாற்றம் வேண்டும்

இப்போது இடமாற்றம் இருக்கலாம் ஆனால் இவர்களுக்குமனமாற்றம் ஏற்பட வேண்டும்

ஆனால் தவறு செய்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்க அரசு தயாராக இருக்கிறது.

அப்துல்லா என்ற போலீஸ் அதிகாரி பற்றி இங்கே லத்தீப் ஒரு பிரச்சனையை எழுப்பினர் அவருக்கு யாரோ தவறான தகவலை தந்துஇருக்கிறார்கள்

ஐ. ஜி. பதவியில் ஸ்டிரேசிக்கு ஏன் பதவி நீடிப்பு? வேறு ஆள் இல்லையா என்று கேட்டார்கள்

## ஸ்டிரேசிக்கு பாராட்டு

யாருக்கும் பதவி நீடிப்பு கூடாது என்பதுதான்இந்த அரசின் கொள்கை. ஆனால் சில சமயங்களில் கட்சிக்கு அப்பாற்பட்டு ஜாதிக்கு அப்பாற்பட்டு யாராவது ஒருவர் தலைமை அதிகாரியாக இருக்க வேண்டும். இதை மனம் விட்டு சொல்கிறேன்.

யாருக்கும் விட்டுக்கொடாமல் நியாயத்தை செய்யும் துணிவுபெற்ற ஸ்டிரேசிக்கு நீடிப்பு தரப்பட்டது.

அப்துல்லா சினியர்என்று லத்தீப் கூறினர்.

ஸ்டிரேசி 1943ம் ஆண்டு ஷெனய் 1946ம் ஆண்டு அப்துல்லா 1947ம் ஆண்டு.

சி. வி. நரசிம்மன் 1948ம் ஆண்டு.

என். கிருஷ்ணசாமி 1948ம் ஆண்டு.

இந்த வகையில் தான் இருக்கிறது. அப்துல்லா கேரளத்தில் 21-11-79 வரை அந்தப் பதவியில் இருப்பார்.

ஆகவே சூது மனப்பான்மையில் தகவல் தருபவர்களிடம் லத்தீப் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

வாணியம்பாடி, ஆம்பூர் பகுதியில் ரூ.5 கோடிமதிப்புள்ள தோல்கள் திருட்டுப் போயிருப்பதாக லத்தீப் தெரிவித்தார், ஆனால் திருட்டுப் போயிருப்பது ரூ.5 ஆயிரத்திற்குத்தான். இதுவும் புலன் விசாரணை செய்யப்பட்டு வருகிறது.

## ஆதாரம் கேட்டதும் ஓட்டம்...

வேறு இரு முஸ்லிம் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது குறித்தும் லத்தீப் குறிப்பிட்டார். குற்றச்சாட்டுக்கு ஆளானதால் நடவடிக்கை எடுக்கப்பட்டது. தற்காலிக வேலைநீக்கம் செய்யப்பட்டு இருக்கிறார்கள்,

லத்தீப் (குறுக்கிட்டு):- இதில் பாரபட்சம் காட்டப்பட்டு இருக்கிறது. இதற்கு ஆதாரம் இருக்கிறது.

முதல்வர் :- ஆதாரம் இருக்கிறது என்று சொல்வது வாடிக்கையாக இருக்கிறது, ஆதாரம் தரட்டும் அதன் மீது நடவடிக்கை எடுக்கத்தயார். இந்த ஆதாரத்தை துணைத்தலைவர் பொறுப்பேற்றுத் தர வேண்டும். ஆதாரம் தருகிறேன் என்று சொல்லி தராமல் இருந்து விடுகிறார்கள் ஆகவேதுணைத்தலைவர் பெற்று தரவேண்டும்.

லத்தீப் :- முதல்வரிடம் நேரில் தருகிறேன் இடையில் ஒருவர் தேவையில்லை முதல்வரிடம் நேராகத்தர முடியும்.

துணைத்தலைவர்:- அவையில் சொல்லப்பட்டதால் அதை இங்கேயே சொல்லலாமே?

முதல்வர்:- இப்படிச் சொல்லி துணைத் தலைவர் ஒதுங்கிவிடக்கூடாது

இங்கே ஆதாரம் இருக்கிறது என்று சொல்லி இருக்கிறார் அது சரியா? தவறு என்றுபார்த்து தரவேண்டும் சபையில் சொல்லப்பட்டதால் சபைத் தலைவர் மூலம் தருவதுதான் முறை (லத்தீப் இதற்கு பதில்தர வில்லை)

## தக்கலை விவகாரம்

தக்கலையில் போலீஸ் ஆபீஸ் தீவைப்பு சம்பந்தமாக நடவடிக்கை எடுக்கவில்லை என்று சாமிதாஸ் கூறினர்,

இது சம்பந்தமாக 10 பேர் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டு 9 பேர் கைது ஆகி இருக்கிறார்கள் ஒருவர் தலைமறைவாக ஆகியிருக்கிறார்,

இது குறித்து புலனாய்வு நடக்கிறது

காவல்துறைக்கு செலவிடப்படும் ரூ. 38 கோடியில் சம்பளம் தருவது எவ்வளவு என்று கூத்தக்குடி சண்முகம் கேட்டார். சம்பளமாக ரூ. 27 கோடியே 77 லட்சத்து 51 ஆயிரம் தரப்படுகிறது.

கூத்தக்குடி சண்முகம்:- புதிதாக சேர்க்கப்படும் 10 ஆயிரம் பேர்களுக்கும் சேர்த்தா?

முதல்வர் :- 10 ஆயிரம் பேர்களும் இன்னமும் சேர்க்கப்படவில்லை. அதற்கு திருத்தப்பட்டியல் வரும்.

## வழக்குகள் வாபஸ்

தொழிலாளர்கள் மீதுள்ள வழக்குகள் பற்றி குறிப்பிட்டார்கள். கொலை வழக்குகள் தவிர மற்ற வழக்குகள் திரும்பப்பெறப் பட்டுள்ளன.

சச்சரவு ஏற்படாமல் அறவழியில் ஈடுபட்ட தொழிலாளர்கள் அனைவரும் விடுதலை செய்யப் பட்டு இருக்கிறார்கள்.

எந்த அரசிடமும்தேவைகளைக் கேட்க உரிமைஇருக்கிறது ஆனால் அந்தஉரிமை கேட்கவும் வரைமுறை இருக்கிறது.

காவல் துறையினருக்கு 8 மணிநேர வேலைபற்றி கேட்டார்கள்தேவையான ஆட்கள் சேர்க்கப்பட்டு அவர்களுக்கு சம்பளம்தரக் கூடியநிலை வரும்போதுஇதுபற்றி நிச்சயம் அரசு சிந்திக்கும்.

10 ஆயிரம் காவலர்கள் சேர்க்கும் திட்டப்படிசிறுகச் சிறுக சேர்க்கப்பட்டு வருகிறார்கள்.

காவல்துறையில் முஸ்லிம் சமுதாயத்தினருக்கு வேலைதரப்படவில்லைஎன்று லத்தீப் கூறினர் காவல் துறையில் இவர்கள் 5.3 சதவிகிதம் இருக்கிறார்கள்

## 20 இடங்களில் புதிய தீயணைப்பு நிலையம்

பல இடங்களில் தீ அணைப்பு நிலையங்கள் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டார்கள். இந்த ஆண்டு 20 இடங்களில் தீ அணைப்பு நிலையங்கள் அமைக்கப்படும்.

(கைதட்டல்)

## தொலைபேசி வசதி

காவல் நிலையங்களில் தொலைபேசி வசதி இந்த ஆண்டில் செய்து தரப்படும் இந்த தொலைபேசிகளில் மக்கள் காசைப் போட்டுப்பேசலாம்.

(கைதட்டல்)

## காவல்துறை சீரமைப்பு

காவல்துறை எப்படி இருக்கும் என்று கூத்தக்குடி சண்முகம் கேட்டார்.

காவல்துறை 3 பிரிவாகப் பிரிக்கப்படும். ஐ. ஜி. என்போர்ஸ்மெண்ட், ஐ.ஜி. எமர்ஜென்சி ஐ. ஜி. சர்வீஸ் என 3 பிரிவாகப் பிரிக்கப்பட்டு 3 ஐ ஜிக்கள் நியமிக்கப்படுவார்கள்.

இவர்களுக்கு மேல் டைரக்டர் ஜெனரல் ஒருவர் இருப்பார்.

மதுவிலக்கு அமல் விபசார ஒழிப்பு சட்ட அமல் சமூக உரிமைகள்குறைபாட்டை ஒழிப்பு போன்றவைகள் ஐ. ஜி என்போர்ஸ்மெண்டிடம் இருக்கும்.

இந்த புதிய அமைப்புகள் படிப்படியாக 3 ஆண்டுகளில் அமல்படுத்தப்படும்

## 145 புதிய காவல் நிலையங்கள்

மதுவிலக்கை அமல் நடத்த புதிதாக அமையும் காவல்துறை பிரிவு அமைக்கப்படும் 145 காவல் நிலையங்கள் அமைக்கப்படும்.

இதற்கு 8,300 சார்பு நிலைக்காவலர்கள் சேர்க்கவும் சிபார்சு செய்யப்பட்டுள்ளது.

ஐ. ஜி. எமர்ஜென்சியின் கீழ் சிறப்புக்காவல் சட்ட ஒழுங்கு ஆயுதக் காவல் படை போலீஸ்வயர்லஸ் இயற்கை சீற்றங்களின் போது பணியாற்றுவது போன்றபிரிவுகள் இருக்கும் ஐ ஜி சர்வீசின்கீழ் குற்றப் புலனாய்வு போக்குவரத்து போன்ற பிரிவுகள் இருக்கும்.

## புதிய திட்டம்

ஓய்வு பெற்ற ராணுவ வீரர்களை நகரங்களிலும், ஊர்களிலும்ஒன்றுஇரண்டு தெருக்களுக்கு 2, 3 ஓய்வு பெற்ற ராணுவ வீரர்கள் என்றுஊர்க்காவல் வேலைக்குப் பயன்படுத்துவது.

அந்த தெருவில் இருக்கும் வீட்டினரும் ஒரு ரூபாய்த்தர வேண்டும்.

இவர்களுக்கு மாதம் ரூ 150க்கு குறையாமல் கவனித்துக்கொள்ளப்படும் இதில் ஏற்படும் பாக்கியை அரசு தரும்.

இந்த திட்டத்தின் மூலம் வேலை இல்லாமல் இருக்கும் ஓய்வுபெற்ற ராணுவவீரர்கட்கு வேலை கிடைக்கும் அவர்களதுராணுவப்பயிற்சி பயன்படும்

## புதிய சலுகைகள் அறிவிப்பு

காவல்துறையினருக்கு ஓரளவு வசதி செய்து தரப்பட வேண்டும் என்றுஉறுப்பினர்கள் கூறினார்கள். அந்த அடிப்படையில் சில சலுகைகளை அவர்களுக்கு அறிவிக்கிறேன்.

பந்தோபஸ்து வேலைக்காக செல்லும் இன்ஸ்பெக்டர், துணை இன்ஸ்பெக்டர் அசிஸ்டெண்ட் சப் இன்ஸ்பெக்டர் ஆகியோர்களுக்கு தற்போது உணவுப் படி ரூ 4.50 அளிக்கப்படுகிறது இது ரூ 6 ஆக உயர்த்தப்படும்

(கைதட்டல்)

இது போல காவலர் தலைமை காவலர்களுக்கு உணவுப்படி இப்போது தரப்படும் ரூ. 3ல் இருந்து ரூ. 4.50 ஆக உயர்த்தப்படும்.

(மீண்டும் கைதட்டல்)

ஆயுதப்படையில் உள்ளவர்களுக்கு ரூ. 35 லிருந்து 60 ஆக உயர்த்தப்படும்,

(மீண்டும் கைதட்டல்)

காவலர் தலைமைக்காவலர் ஆகியோர்வடுப்புகாலங்களில் பணியாற்ற இப்போது ரூ 2 தரப்படுகிறது

(4-ம் பக்கம் பார்க்க)

---

"எழுதுவது குறளோவியம்;
ஓதுவதோ கொலைக்காவியம்"

# சபாஷ் கலைஞர்

: ப. உ. ச. :

மறைந்த ஆசைத்தம்பியின் உடலைக்காணச் சென்ற சலப்புச செல்வருக்கும், மதுரை மேயருக்கும், நண்பர் இராசாராமுவிற்கும், எனக்கும் ஏற்பட்ட சம்பவங்களுக்காகப் பேராசிரியர் அன்பழகன் வருத்தமும், கண்டனமும் தெரிவித்து அறிக்கை விட்டார்.

டாக்டர் கலைஞர் அவர்களோ அதை நியாயப்படுத்தி பேசியுள்ளார். ஏன்?... மீண்டும் நுக்க உற்சாகம் ஊட்டியுள்ளார்.

என்ன இருந்தாலும் கலைஞர் கலைஞர்தான்!

தொண்டர்களைக் காட்டிக் கொடுக்க, அவர்களிடம கெட்ட பெயர் வாங்க பேராசிரியரை ஏவி விட்டு, தான் தொண்டர்களின் காவலனாக பெயர் எடுத்துள்ளாரே, இவரல்லவா தலைவர்!

இழவு வீதியில் கலவரம்!.. பனிதாபிமானம் உள்ளவர்கள் கண்டிக்கின்றனர்! ஆனால் இந்த மாத்தமிழர், நியாயப்படுத்துகின்றார்.

பொதுச் செயலாளர் வருந்துகிறார்! கலகத் தலைவரோ வெண்சாமரம் வீசுகிறார்!

செருப்பேந்திகளை எடுபிடிகளாக வைத்துள்ள செருக்குடையார், செத்தவர்க்கு அஞ்சலி செலுத்துவதை மறந்து அவருக்கு உரிய பாணியில் பொய்யை மெய்யாக்கியும், பணியைச் சயிறாக்கியும் திரித்துக் கூறியுள்ளார்.

'ஆசைத்தம்பி அமைச்சர் பதவி கேட்டிருந்தால் அவருக்குக் கொடுத்திருப்பேன்'-என்று கூறியுள்ளார். நல்லவேளை ஆசைத்தம்பியை எரித்த இடுகாட்டுக்கு வெகுதூரம் தள்ளி இராயபுரத்தில் இதைக் கூறியுள்ளார். ஒருவேளை ஆசைத்தம்பியின் ஆவி எழுந்து வந்து விடுமோ என்று அஞ்சித்தானோ என்னவோ வடசென்னைக்குப் போய் இட்டுக்கட்டிய பொய்யை அவிழ்த்து விட்டிருக்கிறார்.

வரக்கூடிய சக்தி அவர் ஆவிக்கு இருந்தால் (இல்லை அந்த தைரியத்தில் தானே கலைஞர் பேசியுள்ளார்) நிச்சயம் கலைஞரை மிரட்டும்.

ஆசைத்தம்பி ஆசைப்பட்டு அமைச்சர் பதவி கேட்டதும், பழைய பகையின் காரணமாக இவர் தர மறுத்ததும், எங்களுக்கல்லவா தெரியும்?

அதோடு நிற்கவில்லை "அண்ணா அமைச்சர் பதவி தர மறுத்தவர்களுக்கெல்லாம் நான் தந்தேன். அவர்கள் எல்லாம் இன்று துரோகிகளாகிவிட்டனர்" என்றும் கூறியுள்ளார்.

அறிஞர் அண்ணா அவர்கள் இவரை அடுத்த முதல்வராக வரவேண்டுமென்று கூறியது போலவும் என்னை அமைச்சர் அவையில் சேர்க்க வேண்டாம் என்று சொன்னது போலவும் கதை அளக்கிறார்.

திமுகழகம் கலைஞரின் குடும்ப சொத்தா? திமுகழகத்தின் சொத்தை குடும்ப சொத்தாக ஆக்கிக்கொண்டிருக்கும் வள்ளியாரை நான் கேட்டுக்கொள்கிறேன் 'கொஞ்சம் கோபத்தைக் குறைத்துக்கொள்ளுங்கள்' என்று.

என்னை துரோகி என்கிறார் செய்த துரோகம் யாது? அமைதியான நேரத்தில் யோசிக்கட்டும் (சகுனியை வைத்துக் கொண்டல்ல- தனிமையில்)

குதிரையைப் பார்த்து கழுதை என்று சொன்னால் ஒன்று சொல்பவனுக்குக் கண்ணில் கோளாறிருக்க வேண்டும் அல்லது அவன் இரண்டிற்கும் வித்தியாசம் அறியாதவனாக இருத்தல் வேண்டும்.

குயிலைப் பழிப்பதனாலேயே கோட்டான் மதிப்பு உயர்ந்து விடாது!

மயிலை கேலி செய்வதால் வான்கோழியின் ஆட்டத்தை யாரும் ரசிக்க மாட்டார்கள்.

புலியை நரியென்று சொல்வதனாலேயே புலியின் பெருமை குறைந்து விடாது!

புல்லாங்குழலை ஊதாங்குழல் என்பதாலேயே புல்லாங்குழலில் புதைந்துள்ள இனிய நாதம் போய் விடாது!

கரும்பை சோளத்தட்டை என்பதாலேயே கரும்பின் சுவை குன்றிவிடாது!

என்னை துரோகி என்பதாலேயே கலைஞர் பெருமை உயர்ந்து விடாது!

இருக்கும் வழக்குகளில் நான் குற்றவாளியாகத்தான் இருக்கிறேனே ஒழிய 'அப்ரூவர்' ஆகவில்லை! ஆகவும் முடியாது; காரணம் எந்தக் குற்றமும் நான் செய்யவில்லை!

பிடிக்காதவர்களுக்குக் கலைஞர் வழங்கும் பட்டம் துரோகி!

''உன்னால் கட்சிக்கு ஏற்பட்ட லாபத்தைவிட நஷ்டம்தான் அதிகம்'' என்று அறிஞர் அண்ணா என்னைப் பார்த்து சொல்லவில்லை கலைஞரைப்பார்த்துத் தான் சொன்னார்.

அதன் விளைவாகத்தான் அவர் திருச்சியில் அண்ணா அவர்கள் நடத்திய இந்தி எதிர்ப்பு மாநாட்டிற்கு வராமல் சொந்த ஊருக்கு ஓடி ஒளிந்துகொண்டார் இவர் என்னைப் பழிக்கின்றார்!

குற்றத்தைச் சொல்லாமல் பட்டத்தைச் சூட்டுவது இவருக்குக் கைவந்த கலை!

தன் குற்றத்தை மறைக்க பிறர் மீது பழி சுமத்துவது வாடிக்கை!

என்ன செய்வது- காலம் கெட்டுவிட்டது. கண்ணகியை விபசாரி என்று மாதவி பறைசாற்றுகின்றாள்!

கோபாலபுரத்தாருக்கு முதல்வர் பதவி கிடைக்கச் செய்தவர் இராமாபுரத்தார். அவர் மார்பிலேயே பாய்ந்த தனி வரலாறு பெற்ற இவர் நன்றிக்கு விளக்கம் வேறு தருகின்றார்.

சாத்தானுக்கு பக்தர்கள் இருக்கும்போது அது வேதம் ஓதுவதில் தவறில்லையே!

அறிஞர் அண்ணா அவர்கள் வன்முறையை வெறுத்தவர் மட்டும் அல்ல. உண்மையிலேயே அதில் நம்பிக்கை அற்றவர்!

வசவாளர்களையும் 'வாழ்க' என்று வாழ்த்திய பெருந்தகை!

ஆனால் கலைஞரோ வசைபாடும் 'நாவாளர்'! வன்முறைப் பண்ணையார்!

எழுதுவது குறளோவியம்! ஓதுவது கொலைக்காவியம்!

பகைவர்களை மதிக்கிறாராம், துரோகிகளை ஏற்க மாட்டாராம்!

இவர் இலக்கணப்படி நேற்றைய துரோகி இன்றைய பகைவன்; நாளை... நண்பன் என்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

காலந்தான் இவர் குணத்தையல்ல. ஆளை மாற்றும் என்றால் நாமும் காத்திருக்க வேண்டியதுதானே!

அழுத கண்களில் வழியும் நீரைத் துடைத்தவன் துரோகி!

திக்கற்ற நேரத்தில் துணையாக வந்தவன் துரோகி!

வழுக்கி வீழ்ந்தபோது உதவிட உடனிருந்தவன் துரோகி!

பழியைச் சுமந்திட பக்கமிருந்தானே அவன் துரோகி!

குற்ற வளையத்துக்குள் மாட்டிக்கொண்டபோது காட்டிக் கொடுக்க மறுத்தானே அவன் துரோகி!

புதிய இலக்கணம் படைக்கிறார்!

சபாஷ் கலைஞர்!

★ மந்திரிகளே தொழிற்சங்கத் தலைவர்களாக இருக்கும் விந்தை

★ செய்தி போடும் பத்திரிகைகள் மிரட்டப்படுகின்றன

# மார்க்சிஸ்ட் ஆட்சியின் லட்சணம்

## எஸ். எம், நாராயணன் கண்டனம்

சென்னை எப். 19- மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கட்சி அமைச்சர்களே தொழிற்சங்க தலைவர்களாக இன்னும் இருக்கிறார்கள். தொழில் தகராறுபற்றி செய்தி வெளியிடும் பத்திரிகைகள் மிரட்டப்படுகின்றன. இந்த லட்சணத்தில் மேற்கு வங்க முதல்வர் சென்னையில் வந்து பேசுவது விந்தையாக இருக்கிறது என்று தொழிற்சங்க தலைவர் எஸ். எம் நாராயணன் ஒரு அறிக்கையில் கூறியுள்ளார்.

தமிழ்நாடு ஐ. என். டி. யு. சி.யின் துணைப்பொதுச் செயலாளர் என்றும், எஸ். எம். நாராயணன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது -

தொழிற் தகராறுகளில் போலீஸ் தலையிடுவதில்லை என்று மேற்குவங்க முதல்வர் சென்னையில் கூறியிருக்கிறார்.

ஆளுங் கட்சியைச் சேர்ந்தவர்கள் இஷ்டம்போல் தொழிற்தகராறு விஷயங்களில் விளையாடலாம் போலீஸ் தலையிடாது இது தான் அதன்பொருள் என்பதை நாம் உணர வேண்டும்.

மேற்கு வங்கத்தில் "இந்தச் செய்தியைப் போடாதே - அந்தச் செய்தியைப் போடாதே- போட்டால் பத்திரிகை அலுவலகங்கள் சூறையாடப்படும்" என்ற எச்சரிக்கைகள் டெலிபோன் மூலம் விடப்படுகின்றன. என்பதை பலர் அறிந்திருக்க முடியாது. ஆனால் அது தான் உண்மை நிலை.

மந்திரி சபையில் அங்கம் வகிக்கும் பலர் இன்னும் தங்கள் தொழிற்சங்க பொறுப்புகளை ராஜினாமா செய்யவில்லை என்ற விவரத்தையும் அனைவரும் தெரிந்துக் கொள்ள வேண்டும்.

சிலதொழில்களில் உள்ள போட்டித் தொழிற்சங்கங்களில்மந்திரிகள் ஒவ்வொரு சங்கத்திற்குத் தலைவராக இருந்துக் கொண்டு நேரிடைப் பேச்சுவார்த்தைககு வருகிற நிகழ்ச்சிகள்மேற்கு வங்கத்தில் நடைபெறுகின்றன என்பதையும் அனைவரும் அறிந்துக் கொள்ள வேண்டும்.

நடந்த சிஐடியு மாநாட்டில் சிஐடியுவின் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

இவர் இன்னும் சில தொழிற் சங்கங்களுக்குத் தலைவராகத் தொடர்ந்து நீடிப்பதாகக் கேள்வி.

இவ்வாறு தனது அறிக்கையில் எஸ்.எம். நாராயணன் கூறியுள்ளார்.

### ஜோதிபாசு

மேலும் மேற்கு வங்க முதல்வர் சென்னையில்

---

### பெரம்பலூர் சர்க்கரை ஆலை இயக்குநராக அசோக்ராஜ் நியமனம்

சென்னை, ஏப். 19- பெரம்பலூர் சர்க்கரை ஆலையின் இயக்குநராக பெரம்பலூர் தொகுதி நாடாளுமன்ற கழக உறுப்பினர் அ. அசோக்ராஜ் நியமிக்கப்பட்டுள்ளார்.

கரும்பு உற்பத்தியாளர்களின் சார்பாக அரசு தொழில் இலாகா இவரை நியமனம் செய்துள்ளது.

### பேச்சாளர் முகவரி

கவிஞர் உதயகுமார்
விட்டுக்கட்டி (அஞ்சல்)
திருத்துறைப்பூண்டி-614715

---

### மாயூரம் கழக கூட்டத்தில் தி.மு.க.கலாட்டா

மாயூரம், ஏப். 19- மாயூரம், திருவாரூர் சாலை, கிணத்தடியில் ஆர். ஜி கலியமூர்த்தி தலைமையில் கழகப் பொதுக் கூட்டம் நடந்தது.

அமைச்சர் ராஜாமுகமது கோவி நாராயணசாமி, ஆர். ராமகிருஷ்ணன், கோ. பெருமாள் இ. ராமதாஸ், பி.எஸ். சேகர், கந்த பெருமாள், கோ. பெருமாள், தம்பி. பால வேலாயுதம் ஆகியோர் பேசினர்.

சேகர் பேசிக் கொண்டிருந்த போது நகர திமுக செயலாளர் செங்குட்டுவன் மேடை அருகே வந்து கலாட்டா செய்தார். ரகளை செய்த திமுக செயலாளர் போலீசாரால் கைது செய்யப்பட்டு பின்னர் ஜாமீனில் விடப்பட்டார்.

---

முகவரி மாறுதல்

### மின்சார கட்டண வசூல் நிலையம்

சென்னை, ஏப் 19- இதுவரையில் எண் 47 சிவன்கோயில் தெரு (பவர் ஹவுஸ்) கோடம்பாக்கம், சென்னை-24ல் இயங்கிக் கொண்டிருந்த மின்சார கட்டண வசூல் நிலையம், எண் 315 ஆற்காடு ரோடு, கோடம்பாக்கம் சென்னை-600024, எனும் புதிய முகவரிக்கு மாற்றப்பட்டுள்ளது.

மேற்கண்ட புதிய முகவரியில் மின்சாரக் கட்டணத்தை இனி செலுத்துமாறு பொதுமக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்

---



### மாயத்தேவர் தொகுதி மக்களை சந்திக்கிறார்

திண்டுக்கல், ஏப். 19- நாடாளுமன்ற உறுப்பினர் மாயத்தேவர் திருமங்கலம் சட்டமன்ற தொகுதிக்கு உட்பட்ட கள்ளிக்குடி யூனியன் பகுதியில் உள்ள சுமார் 86 கிராமங்களுக்கு இம்மாதம் 21, 22 தேதிகளில் சென்று அந்த பகுதி மக்களின் குறைகளை கேட்டறிகிறார். அவர்கள் தரும் கோரிக்கைகள் மீது நடவடிக்கைகளை எடுக்கிறார்

கழகத் தோழர்கள் கருப்பையா, கண்ணன் பேச்சியம்மாள் கன்னையன், ஆனந்தன் செல்லம் ஆகியோர் மாயத்தேவர் எம் பியுடன் கலந்து கொள்கின்றனர்.

கடந்த 14, 15 தேதிகளில் இந்தப் பகுதிகளில் மாயத்தேவர் செல்வதாக இருந்தது புத்தாண்டினையொட்டி அது தள்ளி வைக்கப்பட்டது. இப்போது செல்கிறார்

---

# சிலை திருட்டை தடுக்க கடும் சட்டம் தேவை

சட்டமன்றத்தில் கழக உறுப்பினர்கள் பேச்சு

சென்னை, ஏப் 19 சிலை திருட்டை தடுக்கவும், கோவில் நிலங்களை மோசடி செய்வதை தடுக்கவும் கடும் நடவடிக்கைகள் தேவை என்று சட்ட மன்றத்தில் கழக உறுப்பினர்கள் கூறினார்கள்

ஆலயத்துறை மானியக் கோரிக்கைமீது சட்டமன்றத்தில் நடந்த விவாதத்தில் கலந்துகொண்டு அரசு கொறடா துரை.கோவிந்தராசன் பேசுகையில் கூறியதாவது:

ஆலய ஊழியர்கள் 50 ஆயிரம் பேர் இருக்கிறார்கள் ஆலயங்களுக்கு ரூ. 19 கோடிக்கு மேல்வரவேண்டி இருக்கிறது.

தஞ்சையில் பலர் கோயில் நிலங்களுக்கான குத்தகை தராமல் இருக்கிறார்கள்.

கரையான் புற்று எடுக்க கருநாகம் புகுந்ததுபோல நல்ல காரியங்களுக்காக கோயில்களுக்கு எழுதி வைத்தநிலம் இவர்களுக்கு பயன்படுகிறது பினாமி பெயரில் கோயிலநிலத்தை வைத்து இருக்கிறார்கள்.

ஆலய ஊழியர்கள் 50 ஆயிரம் பேர்களையும் வாழ வைக்க ஆலயங்களுக்கு வரவேண்டிய ரூ. 20 கோடியை வசூல் செய்ய கடுமையான சட்டம் கொண்டுவந்து வசூல் செய்யவேண்டும்.

கோயில் சிலைகள் திருட்டுப்போகின்றன இருக்கும் சிலைகளும் உண்மையான சிலைகளா அல்லது கடத்தப்பட்டு வேறுசிலை வைக்கப்பட்டு இருக்கிறதா என்றும் பார்க்கவேண்டும்,

சாமிசிலைத் திருடர்களை தண்டிக்க- அவர்களுக்கு கடுமையான தண்டனை தர கடுமையான சட்டம் கொண்டு வரவேண்டும்,

இவ்வாறு துரை கோவிந்தராசன் பேசினார்.

### தாமரைக்கனி

தாமரைக்கனி பேசியதாவது:

வரலாற்றுச் சிறப்புக் கொண்ட திருத்தலமான திருவில்லிபுத்தூர் ராஜகோபுரமும், மதிலும் மிகவும் பழுதடைந்து இருக்கிறது

ராஜகோபுரம் கீழே விழுந்து விடுமோ என்று பயந்து அங்கே குடி இருந்த மக்கள் வேறு இடத்திற்குப் போயிருக்கிறார்கள் ஆகவே இந்த ராஜகோபுரத் திருப்பணியை நடத்த வேண்டும்.

கோயில் நிலங்களை பலர் அபகரித்து இருக்கிறார்கள். இப்படி யார் யார் கோயில் நிலங்களை அபகரித்து இருக்கிறார்கள் என்று கண்டு அறிய தமிழகம் தழுவிய ஒரு குழுவை அமைக்க வேண்டும்

தமிழகஅரசின் முத்திரையிட்டு இருக்கும் கோபுரம் திருவில்லிபுத்தூர்கோபுரம் ஆகும். ஆகவே இதுதான் தமிழக அரசின் முத்திரைக் கோபுரம் என்று அங்கு ஒரு கல்வெட்டு அமைக்க வேண்டும்

திருவல்லிபுத்தூரில் கருணை இல்லம் கருணாநிதி ஆட்சிக்காலத்தில் திறக்கப்பட்டது அனாதைக் குழந்தைகள் கிடைக்காததால் கலைஞர் அந்த இல்லத்தை திறக்க வந்த போது தெருவில் திரிந்த பிச்சை எடுக்கும் குழந்தைகளைக் கொண்டு வந்துதிறந்தார்கள்.

பிறகு ஒரு மாதத்தில் அந்த இல்லம் மூடப்பட்டு விட்டது. இந்த வகையில் ஏகப்பட்ட செலவு ஆகி இருக்கிறது. இது குறித்து அரசு விசாரணை நடத்த வேண்டும்.

கிராமக் கோயில்களில் இன்னமும் பறவைகளையும் ஆடுகளையும் பலியிடுகிறார்கள். இப்படிப்பட்ட செயல்களைத் தடுக்க வேண்டும்.

திருவல்லிப்புத்தூரில் ஆண்டாள் பெயரில் ஒரு கல்லூரி துவக்கப்பட வேண்டும்.

இவ்வாறு தாமரைக்கனி பேசினார்.

### அமிர்தராஜ்

அமிர்தராஜ் பேசுகையில் புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் புனிதஸ்தலங்கள் புண்ணியஸ்தலங்களாகஆகியிருக்கின்றன. கருணாநிதி முதல்வராக இருந்தபோது திருச்செந்தூரில் கண்ணோய் மருத்துவமனை கட்ட ரூ.20 ஆயிரம்செலவுசெய்துவிழா நடத்தி அடிக்கல் நாட்டப்பட்டது. இன்னமும் அடிக்கல் அப்படியே இருக்கிறது ஆகவே அந்த மருத்துவமனையை கட்ட அரசு முற்பட வேண்டும். திருச்செந்தூரில் ஒரு பெண்கள் தொழிற் கல்லூரி அமைத்துத்தரவேண்டும் என்றார்.

### கே.வி. கந்தசாமி

கே.வி.கந்தசாமிபேசுகையில் பழனி கோயிலில் விபூதியை பழனி கோயிலே தயாரித்து விற்க வேண்டும் இப்போது தனியார் இந்த விபூதியை தயாரித்து லட்சக்கணக்கில் லாபம் பெறுகிறார்கள். இது தடுக்கப்பட வேண்டும் என்றார்.

---

பிடி எஸ் தகவல்

### ஏழைகள் வறுமையைப் போக்கும் ஜெர்சி பசு

சென்னை, ஏப். 19- எந்த சீதோஷ்ண நிலையிலும் வாழ்ந்து, குறைந்த அளவு தீவனத்தை உட்கொண்டு அதிக பால் கொடுத்து ஏழைகளின் வறுமையைப்போக்கக்கூடியது "ஜெர்சி" இனப்பசுக்கள் என்று அமைச்சர் பி. டி. எஸ் தெரிவித்தார்,

தமிழக சட்டமன்ற மேலவையில் இது பற்றிய கேள்விகளுக்கு சமூக நலத்துறை அமைச்சர் பி. டி. எஸ். பதில் அளித்ததன் விவரமாவது:-

"ஜெர்சி" இனம் என்பது பசுக்களையும், காளைகளையுமே குறிக்கும்.

ஒரு ஜெர்சி பசுவின் விலை ஏறத்தாழ 15 ஆயிரம் ரூபாய் வரை ஆகும். ஆஸ்திரேலியாவில் இருந்து தமிழ்நாட்டுக்கு முதலில் 50 பசுக்களும் 2 காளைகளும் வந்தன. பிறகு 22 கன்றுகள் வந்தன, அண்மையில் 100 பசுக்கள் வந்தன.

இந்த வகை பசுக்கள் 12 முதல் 15 லிட்டர் பால் கொடுக்கும் ஒரு குடும்பத்திற்கு 2லிட்டருக்கு மேல் தேவை இருக்காது மீதிப் பாலை விற்றால் நிச்சயமாக வறுமை போகும் என்பதால் இந்த வகை பசுக்களை வளர்க்க ஊக்கப்படுத்தப்படுகிறது.

எருமைகளைப் பொறுத்தவரை முர்ரா எருமைகள் தான் சிறந்தவை, அதை தமிழ்நாட்டிலேயே கால்நடைப் பண்ணைகளில் உற்பத்தி செய்கிறோம்."

இவ்வாறு அமைச்சர் பி, டி. எஸ், தெரிவித்தார்,

---

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை - 600014, என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி.தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை, 600004, ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி.

---

### அண்ணா சலவைத் தொழிலாளர் சங்கம்

சென்னை, ஏப் 19- மேற்கு சைதை அண்ணா சலவைத் தொழிலாளர் சங்கக் கூட்டம் டி மக்கிரி தலைமையில் நடந்தது

தலைவராக டி. மணி, செயலாளராக கிருஷ்ணன் பொருளாளராக ஜி. கண்ணன் துணைத்தலைவராக எஸ். ரங்கநாதன் துணைச் செயலாளராக எம். வேலுசாமி செயற்குழுத்தலைவராக எம். வேலுஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

---

### கமலா தியேட்டர்: புரட்சித் தலைவர் பரிசு வழங்கினார்

சென்னை, ஏப். 19- சென்னை கோடம்பாக்கத்தில் அமைந்துள்ள கமலா தியேட்டருக்கு முதல்வர் புரட்சித் தலைவர் பரிசு வழங்கினார்.

சென்னையில்குளிர்சாதன வசதிஇல்லாததிரையரங்குகளில் மிக சுகாதார வசதியுடன் நன்கு பராமரித்து வரும் தியேட்டருக்கான பரிசை மயிலாப்பூர் அகாடமி வழங்கி வருகிறது.

அந்தப் பரிசை இந்த முறை கோடம்பாக்கம் கமலா தியேட்டர் பெற்றுள்ளது.

கமலா தியேட்டரின் உரிமையாளர் வி. என். சிதம்பரம் செட்டியார் முதல்வர் புரட்சித்தலைவரிடமிருந்துசிறந்ததியேட்டருக்கான பரிசை பெற்றுக்கொண்டார்.

---

தீப்பெட்டி தொழிற்சாலைகளில் வேலைக்கு பயன்படுத்தப்படும்

### சிறுவர்களுக்கு கல்வி அளிக்கும் திட்டம்: ராகவானந்தம் தகவல்

சென்னை, ஏப். 19- தீப்பெட்டி தொழிற்சாலைகளில் வேலைக்கு பயன்படுத்தப்படும் சிறுவர்களுக்கு கல்வியும், வேலையும் அளிக்கும் திட்டம் உடபட 5திட்டங்களை அமைச்சரவை முடிவு செய்திருப்பதாக அமைச்சர் ராகவானந்தம் தெரிவித்தார்.

சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது அமைச்சர் ராகவானந்தம் கூறியதாவது:

தீப்பெட்டிதொழிற்சாலைகள் ஆய்வகத்தால்பார்வையிடப்பட்டு 1948ம் வருடத்திய தொழிற்சாலை சட்டத்தின் வரையறைகளை மீறும் நிறுவனங்களுக்கு எதிராக கண்டனை நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

தீப்பெட்டி தொழிற்சாலைகளில் சிறார்களை பயன்படுத்துவது குறித்து அமைச்சரவையில் பின்வரும் 5 முடிவுகள் எடுக்கப்பட்டன.

1. சிறார்களை வேலைக்கு எடுக்கும் நிறுவனங்கள்மீது தொழிற்சாலை சட்டத்தை தீவிரமாககடைப்பிடிப்பது.

2. சிறார்களைதீப்பெட்டி தொழிலுக்கு பயன்படுத்த அந்தந்தகிராமங்களிலேயே கொட்டகை அமைத்து வேலைகொடுக்க ஏற்பாடு செய்வது

3. பள்ளிக்குச்செல்லும் போதே வருவாயை அளிக்கும் திட்டம்.

4 தொழிலாளர்களுக்கு சட்டுத் திறனை (வாதியத்தை) அதிகப்படுத்துவது

5. ஒருங்கிணைந்த குழு ஏற்படுத்துவது.

இந்த குழுவுக்கு கலெக்டர் தலைவர், தொழில் அதிகாரிகள், தொழிலாளர் அமைப்புகள் அங்கங்களாக இருக்கும்.

இந்தப் பிரச்சினைகளை அமைச்சரவை விவாதித்ததிலிருந்தே இதை எவ்வளவு முக்கியமாக அரசு கவனிக்கிறது என்பதை அறிய முடியும்.

சிறார்கள் வேலைக்குப் போவதை தடுக்கும் சட்டத்தை தீவிரமாக செயல்படுத்தவேண்டும் என்று நாம் இங்கே பேசுகிறோம். ஆனால் அதே சமயத்தில் ஏதோ எங்கள் பிள்ளைகள் எட்டணா அத்தணா சம்பாதித்து வந்தால் அதையும் கெடுத்து விடாதீர்கள் என்று பெற்றோர்கள் கூறுவதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

அந்த வகையில் தான் பெற்றோர்களின் வருவாயை அதிகப்படுத்த வேண்டும் என்ற முடிவை எடுத்துள்ளோம்.

மேற்கு வங்க தொழிலாளர்நல அமைச்சரும் நானும் சந்தித்து பேசினோம்.

தேர்தல் காலத்துக்குள் தமிழக அரசு தொழிலாளர்களுக்கு அதிக நன்மை செய்திருக்கிறதா மேற்கு வங்க அரசு செய்திருக்கிறதா என்பதை அறிவிக்க வேண்டும் என்று நாங்கள் முடிவெடுத்தோம்.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் தெரிவித்தார்.

---

### மறைவு

சென்னை, துறைமுகப் பகுதியில் உள்ள அண்ணாவின் இதயக்கனி எம். ஜி. ஆர். மன்றத்தலைவர், ஜி. டி. மூர்த்தியின் தாயார் குள்ளம்மாள் காலமானார். இறுதி ஊர்வலத்தில் சட்டமன்ற உறுப்பினர் ரகோத்தமன்உள்பட திரளான கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

---

ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளி

### தலைமை ஆசிரியருக்கு பாராட்டு: அரங்கநாயகம் பங்கேற்பு

சென்னை, ஏப். 19- மத்திய அரசு விருது பெற்றதையொட்டியும், சென்னைப் பல்கலைக் கழக ஆட்சி மன்றக்குழு உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டதையொட்டியும் ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளி தலைமையாசிரியர் வி.எம். மந்திரத்துக்கு பாராட்டுக் கூட்டம் ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளியில் நடந்தது.

பெற்றோர்- ஆசிரியர்கள் சங்கம், ஆசிரியர்கள் சங்கம், பழைய மாணவர்கள் சங்கம் சார்பில் இந்தப் பாராட்டுக் கூட்டம் நடந்தது.

தலைமையாசிரியர்மந்திரம் எழுதிய "மாணவருக்கு தேவை மனஒருமை" என்ற நூலுக்கு மத்திய அரசு விருது அளித்து இருக்கிறது

அமைச்சர் அரங்கநாயகம் கூட்டத்துக்கு தலைமை வகித்தார் தமிழ்நாடு நல்வழி நிலையம் சார்பில் அளிக்கப்பட்ட "ஆசிரியர் மாமணி" என்ற பட்டத்தை அமைச்சர் அரங்கநாயகம்மந்திரத்துக்குவழங்கிபொன்னாடை போர்த்தினார்.

பேராசிரியர் ஆர். கிருஷ்ணமூர்த்தி வரவேற்புரையாற்றினார் பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் கே. வெங்கடசுப்பிரமணியம், குருவைத்தியநாதன், தம்பிரான், ராமலிங்கம் சாண்டில்யன் ஸ்டேனிஸ் லாஸ் பெர்னாண்டஸ், சிலம்பொலி செல்லப்பன் டி ராமானுஜம் கே டி சோமசுந்தரம எம் கே ராமசாமி பி. எஸ் கிருஷ்ணசாமி பி எஸ் திருவேங்கடம் வி எஸ் மணி ஆகியோர் பேசினர்

சந்தர் வாழ்த்துஇதழினை வாசித்து அளித்தார் கே நடராசன் நன்றி கூறினார்

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 02
6 மாதச் சந்தா தொகை ரூ. 6
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்று கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி

"அண்ணா"

275 அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.



# அண்ணா




# ★ பாரதிராஜாவுக்கு பகிரங்கக் கடிதம் ★

**பாரதிராஜா சார்!**

செவிவழி புகுந்து, சிந்தையைக் கவரும் இனிய இசை, கைத்தட்டித் தாளம் போடவைக்கிறது!

கதிரவனைக் கண்டால் கமலம் மலர்கிறது— நிலவைக்கண்டு அல்லி சிரிக்கிறது!

கார்மேகம் கண்டால் கலாப மயில் வண்ணத்தொகையை விரித்துக் களிநடனம் புரிகிறது!

அழகான ஓவியங்களை அற்புதமான காவியங்களைப் பார்க்கும்போது மட்டுமல்ல, நினைக்கும் போதும் மனம் மகிழ்கிறது!

நல்லவர்களை, நல்லவைகளைக் காணும்போது அகமும், முகமும் மலருகிறது. கற்பனை சிறகடித்துப் பறக்கிறது.

இதோ— எனது கரம், இதயத்தில் தோன்றிய எண்ணங்களை எழுதத் தூக்கிப் பதிக்கின்றன...!

இந்தக் கடிதம் எழுதக் காரணம்... உங்கள் புதிய வார்ப்புகள் தான்!

அச்சு நன்றாக இருந்தால் தான் வார்ப்பும் ஒழுங்காக இருக்கும்.

அச்சாக ('அச்சா' என்றாலும் சரிதான்) நீங்கள் சரியாக இருப்பதால் தான் வார்ப்பும் அழகாக இருக்கிறது!

திறமான புலமையெனில் அதை வணக்கம் செய்ய வேண்டும்! பாராட்டுவதில் கஞ்சத்தனம் கூடாது... அதே சமயத்தில் குறைகளைச் சுட்டிக் காட்டத் தயங்கவும் கூடாது என்பது எனது கருத்து.

பெயருக்கும், செயலுக்கும் பொருத்தமில்லாமலே பல மனிதர்களை அன்றாடம் சந்திக்கின்றோம்!

குருடனுக்குக் கண்ணனுக்கு நல்லதம்பி... அழுக்குத்துணி கமக்கும் நாலுகால் பிராணியின் குரலுடைய உவளுக்கு குயிலிசைவல்லபி, ஆடத் தெரியாதவளுக்கு மயூராணி.... என்றெல்லாம்... பெயர்கள் இருக்கின்றன!

உங்கள் பெயருக்கும், செயலுக்கும் பொருத்தமுண்டு என்பதை நீங்கள் அளித்துள்ள நான்காவது படமும் நிரூபித்துள்ளது!

ஆமாம்! புதிய வார்ப்புகள் அழகான ஒரு கவிதை.

ஒரு கிராமத்திற்குள் ஆசிரியர் ஒருவரும், சமூக சேவகியும் நுழைகின்றனர் (கிழக்கே போகும் ரயிலில் ராதிகா மட்டும் வருகிறார். இதில் இருவர் வருகிறார்கள்- இது தான் மாறுதல்).

ஆசிரியர்மீது பந்தைவீசிய பையன், அவர் நெருங்கிவருவதைக் கண்டதும் பயத்தில் கால்சட்டையை நனைப்பது... அதோடு வழிவது குபீர் சிரிப்பை வரவழைக்கிறது.

நாயனக்காரர் மகிழ்ச்சியாக இருக்கும்போது மோகனராகமும், காம்போதி ராகமும் இசைக்கிறார். துயரத்தோடு இருக்கும்போது மனமிடிந்து முகாரி வாசிக்கிறார்...! திடீரென்று இசை நிற்கிறது... நாயனத்தில் இரத்தம் வழிகிறது- நாயனம் படிக்கட்டுகளில் உருண்டு விழுந்து நிற்கிறது- நாயனக்காரர் தலை சாய்கிறது. முதல் தர இடம்!

"அவர் நடித்தால் தான் உண்டு— இவர் நடிக்காவிட்டால் படம் ஓடாது" என்ற வாதத்தின் முதுகெலும்பை முறித்திருக்கிறீர்கள்.

கதைக்கும், கதாபாத்திரத்துக்கும் பொருத்தமாக எவரை வேண்டுமானாலும் போட்டுபடமாக்கி, வெற்றி பெற வைக்க ஒரு திறமையுள்ள டைரக்டரால் முடியும் என்பதை நிரூபித்திருக்கிறீர்கள். உங்கள் துணிச்சல்... தன்னம்பிக்கையினாலும், திறமையினாலும் வெற்றி பெற்றுள்ளது!

அக்கா சொன்ன செய்தியை ஆசிரியரிடம் சொல்ல மாணவன் வருகிறான். அக்காவின் குரலில் செய்தியைச் சொல்லி விட்டு, இப்படிச் சொன்னாள் என்று அவன் குரலுக்கு மாற்றியிருக்கும் இடம் பிரமாதம்!

இதுபோல் படம்முழுதும் உங்கள் முத்திரைகள் பரவசப்படுத்துகின்றன.

கம்பராமாயணத்தில்...

"ஆயிரம் ராமர் நின்கேழாவரோ தெரியிலம்மா" என்று பரதன் சிறப்பினை கம்பன் வியந்து கூறுகிறான்!

மேலே கண்ட காட்சிகளைக் கண்டு ரசித்த போது... உங்கள் சிறப்பினைக் கூற...

"ஆயிரம் டைரக்டர் நின்கீழ் ஆவரோ தெரியில் பாரதிராஜா" என்று சொன்னாலென்ன என்று தோன்றியது.

கிராமப் பள்ளிக்கூடத்தில் உரத்த குரலில் ஆசிரியர் பாடம் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டு, அடுத்த வகுப்பில் குழந்தையைத் தொட்டிலில் போட்டிருக்கும் ஆசிரியை கோபத்தோடு வருவது...

அதன்பின்பு...மெல்ல பாடம் சொல்லித்தருவது ...தாமதமாக வரும் மாணவனை 'வாங்க'... என்று மரியாதையாக அழைப்பது, காதலியின் நினைவில்பொழுது விடிந்தது தெரியாமல் தூங்குவது, டெலிபோன் பாடம்...நெருப்புப் பெட்டி டெலிபோனில் காதலர்கள் பேசிக்கொள்வது நயமான காட்சிகள்.

கதாநாயகனையும், கதாநாயகியையும் ஆற்றின் மீதுள்ள மரத்தில் அழகாக சந்திக்க வைத்திருக்கிறீர்கள்.

உங்கள் உதவியாளராக உரையாடல் ஆசிரியராக இருந்த பாக்கியராஜை, தமிழ் சினிமா வராத புதுமுகம் ரதியை முக்கிய வேடங்களில் எத்தனை அருமையாக நடிக்க வைத்து விட்டீர்கள்! பலே..

நாயனக்காரர் கே. கே. சௌந்தர் எவ்வளவு இயற்கையாக நடிக்கிறார்... உள்ளத்தை உருக்குகிறார்! பிரமாதம்!

'அம்மாவாசை' கவுண்டமணியின் நடிப்பு பல இடங்களில் பௌர்ணமியாக ஒளிவீசுகிறது.

"எஜமான்...ஊரிலே எந்தப் பொண்ணு வாந்தி எடுத்தாலும் உங்க நினைவுதாங்க வருது"

"நெல்லு ஒரு தடவை வெந்துட்டா மறுபடி விதைக்கப் பயன்படாது பொண்ணு மனசும் அப்படித்தான்.";

"பூவை பறிச்சாத்தான் வாடும் என்பதில்லே, செடியிலேயே இருந்தாலும் வாடி விடும்"

பாக்கியராஜ் வசனங்கள் பொருத்தமாக அழகாக உள்ளன.

"இதயத்தைத் தந்தால் தான் குங்குமம் கொடுப்பேன்"- பத்திரிகைகளை வைத்து காதலர்கள் பேசுவது நல்ல நயம்.

பசுத்தோல் போர்த்த புலியாக பண்ணையார் வேடத்தில் சீனிவாசன் மிடுக்காக நடித்துள்ளார்.

சமூக சேவகியாக இயற்கையாக நடித்திருக்கிறார். உஷா "கையெடுங்க" என்று பண்ணையாரை அதட்டுகின்ற இடம் அருமை.

பூ விற்பதற்காக, கொட்டுவைத்துக் கொண்டு அடுத்த ஊருக்கு செல்லும் விதவையாக சதிஸ்ரீயை நடிப்பில் மணக்க வைத்திருக்கிறீர்கள்.

நிவாஸ் ஒளிப்பதிவு, ரங்கோலி கோலம்போல் அழகோ அழகு!

ரதியின் கண்களையும், முகபாவங்களையும் எத்தனை அழகாக படமாக்கியிருக்கிறார்!

இளையராஜாவின் இசையமைப்பில் கவிஞர் கண்ணதாசன், முத்துலிங்கம், கங்கை அமரன் பாடல்கள் இனிமையாக உள்ளன. கனவுக் காட்சிப் பாடல் முணுமுணுக்க வைக்கிறது. அதனைப் படமாக்கியிருக்கும் பாங்கு பாராட்டுவதற்குரியது.

கார்த்திகை சொக்கப்பானையில் வில்லனின் உயிரற்ற உடலை மறைத்து வைப்பதும், கொளுத்துவதும் கதையில் இதுவரை செய்யாத ஒரு புதிய வார்ப்பு. செல்வராஜின் கதையில் கிராமிய மணம் கமழ்கிறது. அதை உங்கள் கைவண்ணம் மேலும் கமகமக்கச் செய்துள்ளது.

குழந்தையை அழகாக அலங்கரித்து விட்டு, யாருடைய கண்ணாவது பட்டுவிடுமென்று தாய்மார்கள் திருஷ்டிப்பொட்டு வைப்பார்கள். இவ்வளவு தூரம் பாராட்டி அழகுபடுத்திவிட்டு, குறைகளைச் சொல்லாமலே விட்டுவிட்டால் உங்களுக்கும் கண்ணேறு பட்டுவிடும்.

அதோடு-

பாராட்டுகின்றவர்களை-வளர்த்துவிடுகின்ற ஏணியை- வெகுவேகமாக மறப்பதும்- திட்டுகின்றவர்களை தேடிப்போய் சரிசெய்து நினைவில் பதித்துக் கொள்வதும் அதிகமாக உள்ளக் கலையுலகில் நீங்கள் இருக்கிறீர்கள்.

என் நினைவு வேண்டுமென்பதற்காக அல்ல, உங்களைப்பற்றி நீங்களே அறிந்து கொள்வது உங்கள் எதிர்காலத்திற்கு நல்லது என்பதால் குறைகளைச் சொல்கிறேன்,

## இவைகள் சரிதானா?

ரியலிசம் தேவைதான், அதற்காக செம்பை எடுத்துக்கொண்டு செடி மறைவில் உட்கார்ந்து எழுந்திருப்பதைக்கூடக் காட்டவேண்டுமா?

சமூக சேவகியைப் பண்ணையார் கெடுத்துக் கிணற்றில் போட்டுவிடுகிறார். பழி ஆசிரியர் மீது! தண்டனை யாருக்குமில்லையே! போலீஸ்காரர்களே கால் வைக்காத அந்த ஊர் எங்கே சார் இருக்கிறது?

கடைசியில் கதாநாயகி பண்ணையாரைக்குத்திக்கொல்கிறாள். கத்தியால் பெண் குத்தினால் பண்ணையார் சத்தம் போடவோ, துடிக்கவோ மாட்டாரா? பெண்கள் கத்திக்குத்து அவ்வளவு சுகமாக இருக்குமா?

கதாநாயகி கொலை செய்கிறாள். அம்மாவாசை அந்தப்பிணத்தை கார்த்திகை சொக்கப்பானைக்குள் மறைத்து விட்டுப்புறப்படுகிறான்.

குற்றங்களைச் செய்து அதை அடுத்தவர் மீது சுமத்தித்தப்பித்து வந்தவன் பண்ணையார்-வில்லன்! அவனையே கொலை செய்கிறாள் கதாநாயகி! இந்தக்குற்றத்திற்கு தண்டனை அனுபவிப்பது யார்? வில்லனும், கதாநாயகி, கதாநாயகன் எல்லோரும் ஒரே பண்புள்ளவர்கள் போல் முடித்தது சரியா?

எவ்வளவோ புரட்சிகரமாக, புதுமையாகச் செய்துள்ள நீங்கள், கொலைக் குற்றம் செய்துவிட்டு, தந்திரமாக ஒடித் தப்பித்துக் கொள்ளலாம் என்று முடிப்பது? பண்ணையார் குற்றங்கள் அந்த ஊருக்கு... யாராவது சிலருக்கு புரிந்திருப்பதாகக்கூடக் காட்டவில்லையே!

அம்மாவாசை பூக்காரியின் குழந்தையைவாங்கிக்கொள்கிறான்- விதவையை அவன் ஏற்றுக்கொள்கிறான் என்பதை இந்தக் குறிப்பால் அழகாக சித்தரித்திருக்கிறீர்கள்

"வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும் வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்" என்றான் பாவேந்தன் பாரதி!

விருப்பமில்லாமல் மணந்து கொண்டவளின் தாலியைக் கணவனே அறுக்கிறான்; அவளைக் காதலனின் கையில ஒப்படைக்கிறான். (பாரதிராஜா என்ற பெயர் உங்களுக்குப் பொருத்தம்) இது உங்கள் அபாரத் துணிவைக்காட்டுகிறது.

கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போக வேண்டும்-சம்பிரதாயங்கள் சடங்குகள் மனிதகுலத்திற்கு விலங்குகளாக இருந்தால் அவைகளை அடித்து நொறுக்கவேண்டும்

என்ற வேகம்-விவேகம் உங்கள் படைப்பில்தெரிகிறது!

காலத்திற்கேற்றபடி கருத்திலே மாற்றம் வேண்டும். அப்படி மாறாத சமுதாயம் மறைந்துவிடும் என்றார் பேரறிஞர் அண்ணா. அந்த மாற்றம் உண்டாக்கும் முயற்சி உங்களுடையது.

'பழமை, பழமையென்று பாவனை பேசலன்றிப் பழமை இருந்தநிலை-கிளியே பாமரர் ஏதறிவார்' என்றார் பாரதி!

பழமையும் புரியாமல், புதுமையும் விளங்காமல் தள்ளாடித் தடுமாறும் போக்கினருக்கு "புதிய வார்ப்புகள்" வழி காட்டும்!

பழமையிலே புதுநினைவு பாய்ந்தாற்போல் என்றான் புரட்சிப்பாவேந்தன்.

உங்கள் படைப்பில் பழமை, கிராமியம் இருக்கிறது-புதுநினைவும் பூத்துக் குலுங்குகிறது.

மொத்தத்தில்—

'புதியவார்ப்புகள்— தமிழ்க் கலையுலகத்திற்கு பெருமை சேர்க்கும் புதுமைப் படைப்பு-புரட்சித் திறவுகோல்!

அன்பன்

நாகை தருமன்

# சென்னை வானொலி தி. மு. க. வுக்கு குத்தகையா?

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் சட்டமன்றத்தில் நேற்று காவல்துறை மானியக்கோரிக்கை மீது நடந்த விவாதத்துக்கு பதில் அளித்திருக்கிறார்!

முதல்வரின் உரையில் அடங்கியுள்ள விவரங்களையோ அறிவிப்புகளையோ சென்னை வானொலி நிலையம் செய்தி ஒலிபரப்புகளில் ஒரு வரி கூட சொல்லவில்லை!

சட்டமன்ற நிகழ்ச்சிகளை வானொலி நிருபரும் கவனித்துள்ளார் மற்றும் வானொலிக்கு செய்தி கொடுக்க யு என் ஐ போன்ற செய்தி நிறுவனங்களும் உள்ளன.

நெய்வேலியில் இரண்டு பேர் ஜனதாக்கட்சியில் சேர்ந்தால் அதை முக்கிய செய்தியாக ஒலிபரப்பும் சென்னை வானொலி ஜனதாக்கட்சியின் வட்டக்கிளை தலைவரின் அறிக்கையைக்கூட ஒலிபரப்பும் சென்னை வானொலி கருணாநிதியின் அனைத்து செய்திகளையும் 'கர்ம சிரத்தையுடன்' ஒலிபரப்பும் சென்னை வானொலி தமிழக முதல்வர் காவல் துறைபற்றி வெளியிட்ட அறிவிப்புகளை ஒலிபரப்பாமல் விட்டது ஏன்?

கவனக்குறைவா?

அலட்சியமா?

அல்லது

கோபாலபுரத்துக்கு சென்னை வானொலி குத்தகை போய்விட்டதா?

ஆயிரம்மைல்களுக்குஅப்பாலுள்ளடெல்லியிலிருந்து ஒலிபரப்பாகும் செய்தியில் தமிழக முதல்வரின் அறிவிப்புகள் இடம்பெற்றன.

ஆனால் சென்னை வானொலி நிலையத்தில் உள்ள திமுக பெருச்சாளிகள் தமிழக முதல்வரின் அறிவிப்பை புறக்கணித்துவிட்டனர்! இதைஎன்னவென்றுசொல்வது?

கொழுப்பு

இறுமாப்பு

அகந்தை

ஆணவம்

என்று என்னபெயரிட்டு அழைத்தாலும் தகும்!

சென்னை வானொலியில் உள்ள திமுக குட்டிச் சாத்தான்களே! குவளை சமஸ்தானத்துக்கு குற்றேவல் புரியும் குள்ளநரிகளே! உங்கள் நரித்தனம் நீண்ட நாளைக்கு செல்லுபடியாகாது! உஷார்! உஷார்!

மிகவிரைவில் உங்கள் சதிகள் உரிய இடத்தில் அம்பலப்படுத்தப்படும்! எச்சரிக்கை!





# புதிய சலுகை

இது ரூ 7 ஆக உயர்த்தப்படும்.

(மீண்டும் கைதட்டல்)

## வீரமரணம்: ரூ.10ஆயிரம் அறிவிப்பு

காவலர்கள் ஆபத்தான பணியின் ஈடுபட்டு வீரமரணம் அடைந்தால் அவரின் குடும்பத்திற்கு ரூ 10 ஆயிரம் தரப்படும் அரசு ஊழியர்களுக்கு தரப்படும் 10 ஆயிரம் தவிர இந்த ரூ 10 ஆயிரம் தரப்படும்

(பலத்த கைதட்டல்)

இதுபோன்ற நேரங்களில் உடல் ஊனமுற்றால் ரூ. 1000த்திலிருந்து ஆயிரம்வரை தரப்படும் வேலை செய்ய இயலாமல் போகிறவர்களுக்கு ரூ 5 ஆயிரம் தரப்படும்.

நிதிநிலை பற்றாக்குறை இருந்தும் இந்த சலுகைகளை அரசு அறிவிக்கிறது.

## சங்கம் தேவையா?

காவல் துறையினருக்கு சங்கம் அமைப்பது பற்றி உமாநாத கேட்டார். காவல் துறையினர் கேட்காமலேயே அரசு முடிந்தவைகளை செய்து வருகிறது ஆகவே சங்கம் அமைக்க அவசியம் இராது.

அதிகாரிகளிடம் ஆர்டர்லிகள் இருப்பதை மாற்ற அரசு ஆலோசித்து வருகிறது அவர்களுக்கு அலவன்ஸ் தந்துஇந்தஆர்டர்லி திட்டத்தை ஒழிப்பதையும் அரசு பரிசீலிக்கும்.


(2-ம் பக்க தொடர்ச்சி)


சிவசாமி: மந்திரியின் தலையை காலை கையை வெட்டிவிடுவோம் என்று கடிதம் வந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது அதில் கையெழுத்து இருப்பதாகவும் சொல்லப்படுகிறது அதுபற்றி தகவல் தரப்படுமா?

முதல்வர் புரட்சித் தலைவர்:- எனக்கு அதுபற்றிதெரிவிக்கப்படவில்லை தகவல் வரும்போது தெரிவிக்கிறேன்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்

# சிவ. இளங்கோ மீதுநடவடிக்கை: அரசு ஊழியர் கோரிக்கை

சென்னை, ஏப். 19-

தமிழ்நாடு அரசு அலுவலர் கழகப் [சி டி] பிரிவுஊழியர்கள் ஏராளமானோர் கோட்டையை நோக்கி இன்று ஊர்வலமாகச் சென்றனர்.

சிவ இளங்கோ மீது நடவடிக்கை எடுக்கக் கோரி செல்லும் இந்த ஊர்வலத்திற்கு சங்கரன் தலைமை வகித்தார்.

முத்தானந்தம், மோகன், ராமசாமி, அமுதா, சூடாமணி ஆகியோர் பிரதிநிதிகளாக சென்று அமைச்சா பண்ருட்டியிடம் கோரிக்கை மனுவை அளித்தனர்.

# ராகவானந்தம் தகவல்


(1-ம் பக்கத் தொடர்ச்சி)


கொண்டுள்ளது

சென்ற ஆண்டு 8 ஆயிரத்து 741 புகார்கள் தகாராறுகள் தீர்வு செய்யப்பட்டுள்ளன.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம்கூறியுள்ளார்

வீட்டுவசதி மானிய கோரிக்கையில் அமைச்சர் ராகவானந்தம் கூறியிருப்பதாவது:

பொருளாதாரத்தில் நலிந்த பிரிவினருக்காக 1979-80ம் ஆண்டில்1500 குடியிருப்புகள் ரூ. 83 லட்சத்து 28 ஆயிரம் செலவில் கட்டப்படும்,

குறைந்த வருவாய் உள்ளவர்களுக்காக 4500 வீடுகள் ரூ. 3 கோடியே 26 லட்சத்து 23 ஆயிரத்தில் கட்டப்படும்

நடுத்தர வருவாய் பிரிவினருக்கு ரூ 4 கோடியே 32 லட்சம் செலவில் 2400 வீடுகள் கட்டப்படும்.

காவலர்களுக்கு ரூ 50 லட்சம் செலவில் வீடுகட்டி கொடுக்கப்பட இருக்கிறது

குடிசைப்பகுதி மாற்று வாரியத்திட்டத்தின் கீழ் சென்னை நகரில் 4 ஆயிரம் குடியிருப்புகள் மொத்தம் ரூ 3 கோடியே 75 லட்சம் செலவில் கட்டப்படும்

கிராமப்புற வீட்டுவசதி திட்டத்தின்கீழ் ஒருலட்சம் வீடுகள் கட்டப்படும் 1978.79ல் ஐந்து ஆயிரம் வீடுகளும் 79-80ல் 20 ஆயிரம் வீடுகளும் கட்டப்படும்

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் அறிவித்துள்ளார்